REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55650

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.



மலர் 4] சென்னை: பங்குனி 19உ திங்கள் (1—4—57) ★ ★ வெளியூர்: பங்குனி 20உ செவ்வாய் (2—4—57) [இதழ் 251

# நாட்டின் அருமையான செல்லப் பிள்ளைகள்—முதல்தரமான தொண்டர்கள்

## வெற்றி பெற்ற தி.மு.க. எம்.எல்.ஏ., எம்.பி.-க்களுக்கு தலைநகர் தந்த தன்னிகரில்லா வரவேற்பு

### கடற்கரையில் இலட்சக்கணக்கான மக்கள் திரண்ட அரிய காட்சி

### நெடுஞ்செழியன் தலைமையில் மகத்தான வெற்றிவிழா

### அண்ணு மற்றும் வெற்றி பெற்றவர்கள் முழக்கம்

சென்னை, மார்ச் 1—

நீலக் கடலில் ஓயாது எழும் நெடுந்திரைகள் தொட்டுத் தழுவும் திருவல்லிக்கேணிக் கடற்கரையின் அழகிய வெண்மணற் பரப்பு நேற்று மாலை கருநிறம் பூண்டிருந்தது. மணற்பரப்பில் திரண்டிருந்த மக்கள் வெள்ளமே இந்த நிற மாற்றத்திற்குக் காரணமாகும்.

எப்பக்கம் திரும்பினும் கண்ணுக்கு எட்டியவரையில் ஒரே தலை மயம்—கணக்கிலடங்காத மக்கள் கூட்டம்!

தங்களின் விடுதலைக்காக, தாங்கள் தோற்றுவித்துள்ள விடுதலைப் போர்ப் படையாம்-திராவிட முன்னேற்றக் கழகத்தினர் தேர்தலில் பெற்ற வெற்றிக்காக நேற்று விழாவெடுத்தனர், தலைநகரில்!

நகரின் பல பகுதிகளும் கழகத்தின் கொடிகளாலும், விடுதலை முழக்கங்கள் பொறித்த வளைவுகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, காண்போரைக் களிப்பிலாழ்த்திக் கொண்டிருந்தன.

வெற்றிபெற்ற தி. மு. கழக எம்.எல்.ஏ.-க்களுக்கும், எம்.பி.-க்களுக்கும் தலைநகர மக்கள் பாராட்டுத் தெரிவிக்கவும், வாழ்த்துக் கூறவும் மகத்தான அந்த வெற்றிவிழாவில் சுமார் நான்கு இலட்சம் பேர் கடற்கரை மணலில் குழுமினர்.

தங்களது வாழ்வுக்கு உரிய பொருளைக் கொண்டுவந்து சேர்த்துச் சிறப்பினைப் பெய்யவும் வாழ்வைச் செம்மையுறச் செய்யவுமாகத் தாங்கள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளைக் கண்டு மகிழவும், தங்களது ஆதரவு திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு என்றென்றைக்கும் உண்டு என்ற உறுதி மொழியை நல்கவுமாக ஆடவரும் பெண்டிரும், முதியோரும், வாலிபரும் இலட்சக்கணக்கில் கடற்கரையை நிரப்பியிருந்தனர். அந்தக் காட்சி சென்னைக்குப் புதிது என்றே சொல்லவேண்டும்.

#### கழகக் கொடி கம்பீரமாகப் பறந்தது

மக்களின் அந்த மாபெரும் கூட்டத்தின் நடுவே கழகக் கொடி ஒன்று, உயர்ந்த கம்பத்தில் கம்பீரமாகப் பறந்துகொண்டிருந்தது.

மேடையும் இதர இடங்களும் சிறப்பான ஒளி அலங்காரங்களைப் பெற்றிருந்தன.

உயர்ந்த அந்த மேடையில் பொதுச்செயலாளர் அவர்களும், அண்ணு அவர்களும், இதர வெற்றி பெற்ற எம். எல். ஏ.-க்களும், எம். பி.-க்களும் அமர்ந்திருந்தனர்.

#### கூட்டம் ஆரம்பம்

கூட்டம் சுமார் 7-15 மணிக்குத் துவங்கிற்று.

#### இன்னிசை

கூட்டத்துவக்கத்தி[illegible] பலர் இயக்கப் பாடல்கள் பாடினர்.

#### தலைமை ஏற்பு

தாயக வாழ்த்து[illegible] பிறகு, தி. மு. க. துணைப் [illegible]துச்செயலாளர் என். வி. ந[illegible]ராசன் அவர்கள் முன்மொழிய, மதுரை மாவட்டச் செயலாளர் [illegible] மொழிந்து அவர்கள் வழிமொழிய பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமை ஏற்று, கழகம் பொதுத் தேர்தலில் ஈடுபட்ட நிலைகள், நோக்கங்கள், மாற்றாரின் எதிர்ப்பு, ஆட்சியாளரின் போக்கு, கழகம் ஈட்டிய வெற்றி ஆகியவை குறித்து, அரியதோர் ஆய்வுரை நல்கினர்.

"நாம், எதிர்பார்த்ததைவிட மகத்தான வெற்றிகளைச் சம்பாதித்துள்ளோம். எதிர்காலம் நமக்குத்தான் என்பதை நாட்டவர் தந்த வாக்குகள் சொல்கின்றன. நமது வெற்றிகள் மாற்றாரும் கண்டு வியக்கத்தக்கனவாயுள்ளன. நமது வளர்ச்சி இடையறாத ஒன்று என்பதைத் தேர்தல் மெய்ப்பித்துவிட்டது"

என்ற உண்மைகளை பொதுச்செயலாளர் அடுக்கிக் காட்டினர்.

அவரது ஆய்வுரை சிலருடையதைப்போன்று சம்பிரதாயத்திற்காக நிகழ்த்தப்படுவது போலன்றி உண்மை நிலைகளை—புள்ளிவிவரங்களைக் கொண்டு தெளிவாக்கு[illegible] அமைந்திருந்தது, மாற்றார் கண்டு உணரத்தக்க ஒன்றாகும்.

#### மாலை அணிவிப்பு

பின்னர், வெற்றிபெற்ற எம். எல். ஏ.-க்கள், எம். பி.க்களுக்கு பொதுச்செயலாளர் அவர்கள், தலைமைக் கழகத்தின் சார்பில் மலர்மாலைகள் அணிவித்தார்.

#### மக்கள் ஆரவாரம்

"கழகத்தின் வழிகாட்டி—திராவிடத்தின் ஒப்பற்ற தலைவர் நமது அண்ணு அவர்களுக்கு தலைமை நிலயத்தின் சார்பில் மலர்மாலை அணிவிக்கிறேன்" என்று கூறி பொதுச்செயலாளர் அவர்கள், அண்ணுவிற்கு மாலை அணிவித்தபோது, கூடியிருந்த இலட்சக்கணக்கான மக்களும் எழுப்பிய ஆரவாரப் பேரொலி, அவர்களின் கரைகடந்த மகிழ்ச்சியைத் தொட்டுக் காட்டிற்று.

#### பி.டி. இராசன் பாராட்டு

பின்னர், பொதுச்செயலாளர் வேண்டிக் கொண்டதற்கு இணங்க, தமிழ் நாட்டின் பண்பாளர் திரு. பி. டி. இராசன் அவர்கள், வெற்றி பெற்ற அண்ணு, மற்றும் தோழர்களைப் பாராட்டி சிறிதுநேரம் அரிய கருத்துரை வழங்கினர்கள்.

இதன் பின்னர் எண்ணற்ற கழகக் கிளைகள், மன்றங்கள், நாட்டின் நலம் விரும்பும் தனிப்பட்ட நண்பர்கள் பலர் அண்ணு, பொதுச்செயலாளர், மற்றும் வெற்றி பெற்ற அனைவருக்கும் மலர் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் அணிவித்து, தங்களின் ஆதரவையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டனர்.

#### எம். ஜி. ராமச்சந்திரன் வாழ்த்துரை

அடுத்து, எம். ஜி. ஆர். நாடக மன்றத்தின் சார்பில் வெற்றி பெற்றோருக்குக் கைத்தறி ஆடைகளை அணிவித்துப் புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்

(4-ம் பக்கம் பார்க்க)

★★★★★★★★★★★★★★★★★★

## நாளை!

அண்ணு அவர்களின் சொற்பொழிவு நாளை (2—4—57) இதழில் இடம்பெறும்.

★★★★★★★★★★★★★★★★★★

## சீரியதோர் எதிர்க்கட்சியாகப் பணியாற்றுவோம்

### அண்ணு முழக்கம்

பல்லாயிரக் கணக்கான மக்களின் வரவேற்புக்கும் பாராட்டுதலுக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டு பெருமகிழ்ச்சி ஆரவாரப் பேரொலிக்கிடையே அண்ணு அவர்கள் அரியதோர் கருத்துரை வழங்குகையில் குறிப்பிட்டதாவது :—

"இங்கே நீங்கள் தி. மு. கழகத்தின் சார்பில் நின்று வெற்றி பெற்ற எம். எல். ஏ.-க்களையும், எம். பி.-க்களையும் காண்கிறீர்கள்.

"இந்த வெற்றி தமிழ் நாட்டின் அரசியல் வரலாற்றில் சாதாரணமானதோர் சம்பவம் அல்ல—புதியதோர் கட்டம்; தி. மு. கழகத்தின் வரலாற்றில் புதிய பொறுப்பானதோர் கட்டம் என்பதைக் கூறவிரும்புகிறேன்.

"இவர்கள் எல்லாம், கல்லடிகளைத் தாங்கியவர்கள்! சொல்லடிகளை ஏற்றுக்கொண்டவர்கள்! சிறை வாழ்வை அனுபவித்தவர்கள்! ஏளனம்—கிண்டல்—கேலி இவைகளைக்கண்டு கலங்காதவர்கள்! நெறித்த புருவத்தை மறந்தவர்கள்! புன்னகையால்தான் கொள்கை வெற்றி பெறும் என்பதை உணர்ந்தவர்கள்! இந்த நாட்டின் அருமையான செல்லப்பிள்ளைகள்!

"இவர்கள் எதிர்க்கட்சியில் அமர்ந்து, காரியமாற்றமாட்டார்கள் என்றால், வேறு எவர்தான் ஆற்றுவார்கள்? நான் அடிக்கடி 'இப்படைத் தோற்கின் எப்படை வெல்லும்,' என்று கூறுவது போலவே, இப்போதும் கூறுகிறேன்—'இந்தப் படை வரிசையினர் எதிர்க்கட்சியிலிருந்து காரியமாற்றவிட்டால், வேறு யார் காரியமாற்றப் போகிறார்கள்?

"இவர்கள் இங்கே பேசியதைக் கேட்டீர்கள். எவராவது, பேசும்போது, தட்டுத் தடுமாறி வார்த்தை வராமல் திண்டாடினார்களா? இல்லையே! அல்லது, மாற்றார் கூறுவதுபோல் இவர்கள் வெறும் அடுக்குச் சொல்லும் பேசிக் கொண்டிருக்கவில்லை.

"இன்றைய சூழ்நிலையில், நல்லதோர் எதிர்க் கட்சியாகப் பணியாற்றத் தகுதி படைத்த திராவிட முன்னேற்றக் கழகத்தவர், வெற்றி தேடித் தந்த மக்களுக்கு இங்கே நன்றி கூறுகிறார்கள்" என்று குறிப்பிட்டார்கள்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## திராவிட முன்னேற்றக் கழகப் பொதுக்குழுக் கூட்டம்

★

14-4-57 ஞாயிறு அன்று திருச்சி மாவட்[illegible]த்தைச் சேர்ந்த குளித்தலையில் நடைபெறும்.

சென்னை 'அறிவகம்' 1—4—57 } தலைமைக் கழகம் (தி. மு. க.)

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## பஸ் போக்குவரத்து மூலம் அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானம்

சென்னை, மார்ச் 30—

பிப்ரவரி திங்களில் சென்னை நகரத்தில் அரசாங்கம் நடத்தி வரும் பஸ் போக்குவரத்து மூலம் ரூ. 12,90,200 கிடைத்துள்ளதாம்; தினசரி சராசரி 317 பஸ்கள் ஓடியுள்ளனவாம்.

புதிய மாநில அமைப்புக்குப் பிறகு கன்னியாகுமரி மாவட்டத்தில் சென்னை அரசாங்கம் [illegible] வரும் பஸ் போக்குவரத்து மூலம் ரூ. 2,06;671 கிடைத்துள்ளதாம்.

நம் நாடு
தி.மு.கழக இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 1—4—57 திங்கள்

# உல்லாசவாசம் வேறு கேடா?

★

ஏழையைக் கேலி செய்வதில் கெட்டிக்காரர்கள், இந்தக் காங்கிரஸ் ஆளவந்தார்கள்!

இல்லாவிட்டால், ஏழைகளை ஏமாற்றி ஆட்சிப்பீடத்தில் ஏறிக்கொண்டு, ஏழையிடமிருந்து பெறும் வரிப் பணத்தில் பல இலட்சத்தை, தங்கள் இஷ்டத்திற்காகப் பாழடிக்கத் துணிவார்களா?

கோட்டைக்குள் இருந்த சட்டசபைக் கட்டிடத்தை வேண்டாம் என்று சொல்லிவிட்டு, மவுண்ட் ரோடில் மாளிகை எழுப்பி அங்கு குடிபெயர்ந்தார்கள். அந்தக் கட்டிடத்துச் சுவற்றில் அழுக்கேறு முன்னமே, பல இலட்சம் ரூபாய் செலவில் எழுப்பிய அந்த மாளிகை வேண்டாம் என்று கூறிவிட்டு, 'கோட்டைக்கே மீண்டும் குடிபுகுவோம்' என்கின்றார்கள்.

இந்த முடிவுக்குப் புதிய சட்டசபை உறுப்பினர்களின் சம்மதம் பெறப்படும் என்று மந்திரி தந்திருந்த உறுதிமொழி வழக்கம்போல், காங்கிரசார் மக்களுக்குத் தரும் உறுதிமொழிகளின் கதியைப் பெற்றது. அதாவது, ஓடுகிற ஆற்றில் உளக்கைப் கொண்டு எழுதப்பட்ட கணவாயிற்று, அந்த உறுதிமொழி!

போதாது என்று, 'கோட்டையில் குடிபெற்றாலும் கோடை கடுமையாகத்தானே இருக்கும்; எனவே, ஊட்டிக்குச் செல்வோம்—உல்லாசம் பெற,' என்று வேறு கனம் நிதி மந்திரி சுப்பிரமணியம் கூறியிருக்கிறார்.

இது ஏழையைக் கேலி செய்வதாகாதா?

சட்டசபை இடமாற்றத்திற்கென்று பல இலட்சம் பாழ்படுவது காணாது என்று, ஏழையின் வரிப்பணத்தை உல்லாசத்திற்கும், சுகபோகத்திற்கும் வாரி இறைக்கக் காங்கிரஸ் ஆளவந்தார்கள், ஊட்டி செல்வோம் என்கிறார்களே, இந்த அநியாயத்தை, ஏமாந்தபோய் வாக்களித்து, வரிகளையும் புகழ் சுமக்காமல் தாங்கிக்கொண்டிருக்கும் ஏழை எளியோரைக் கேலி செய்கின்றனர்—என்று கூறுவதில் தவறென்ன?

மவுண்ட் ரோடு மாளிகையை வேண்டாமென்பதற்கும், கோட்டையில் குடிபெயர்வதற்கும் போதாது என்று ஊட்டி செல்வோம் என்பதற்கும் அந்த நியாயமான சமாதானமும் சொல்லவில்லை, இந்த காங்கிரஸ் ஆளவந்தார்கள்! தங்கள் மனதில் உதித்த ஆசைகளை எல்லாம் மக்கள் வரிப்பணத்தால் நிறைவேற்றிக் கொள்வதிலேயே குறியாக இருக்கின்றனரே தவிர, இதற்காகப் பாழாக்கும் பணம் ஏழையின் வியர்வை—உழைப்பு என்ற உணர்வு அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

ஏதிர்ப்புக்காட்டாத ஏழை எளிய வர்க்கத்தை ஏய்த்து, ஏழையைப் பாடுபட்ட உத்தமர் காந்தியார்தான் 'எங்கள் பெரும் தலைவர்' என்று இவர்கள் வெட்கமின்றிக் கூறுவது வேறு, ஏழையின் வேதனையைப் பெருக்குகிறது.

'மாளிகை வேண்டேன்—மண்குடிசை போதும்; பட்டுப் பீதாம்பரம் தேவையில்லை—நாலு முழம் துண்டு போதும்' என்று வாழ்ந்து காட்டிய உத்தமரின் இன்றைய வாரிசுகள் நாங்கள் எனப் பீற்றித் திரிவோர்தான், ஏழையின் வரிப்பணத்தை ஊட்டியில் உல்லாசம் தேடுவதற்காக வாரி இறைக்கப்போகிறோம் என்று பேசுகிறார்கள்.

கோட்டைக்கு சட்டசபையை மாற்றுவதைப்பற்றி, 'கூடாது—தேவையற்றது—மேலும் பணம் பாழ்படுவது அநியாயமானது' என்ற கண்டனம் எழுந்தது தீர்ந்தது—அதேயெனக் கொடர்ந்து வருகிறது. அதைப் பொருட்படுத்த மறுப்பதோடன்றி, 'எவர் உளர் எங்களைக் கேட்க?'—என்ற ஆணவப் போக்கில் காங்கிரஸ் ஆளவந்தார்கள், 'ஊட்டிக்கு வருவோம், வருடத்திற்கு ஒருமுறை' என்று கூறுகின்றனர்.

இதற்கு, காரணம் வேறு சொல்கிறார்களாம்!

ஊட்டி, ஒரு முதல்தரமான உல்லாசப் பிரயாண ஸ்தலமாக மாறவேண்டுமானால், சட்டசபை அங்கு கூடவேண்டுமாம்!

உதகமண்டலத்தின் கவர்ச்சிக்கு மெருகு பூச இந்த ஆளவந்தார்கள், ஏழையின் அடிவயிற்றில்தானா கை வைக்க வேண்டும்? சட்டசபை அங்கு கூடுவதால் அதற்காகும் அதிகச் செலவு, ஏழையின் வரிப் பணத்தில்தானே நடைபெறும்?

உதகமண்டலத்தில் உல்லாசம் தேடிச் செல்வோரின் வசதிக்காக ஏழை எளியோரைய, அன்றாட வாழ்வுக்காக—தினம் வயிற்றை நிரப்பிக் கொள்வதற்காகப் பெரும் போராட்டத்தில் சிக்கிக் கொண்டிருக்கும் ஏழைமக்களையா தண்டிக்க வேண்டும்?

வாழ்வே முடிவாக இல்லையில் வாழ்வுபெற போராட்டத்தைச் சந்திப்பதற்கு கிடக்கும் நிலையில் உள்ளனர், பெரும்பாலான மக்கள்! ஆனால், அவர்கள் பெயரால் ஆட்சி நடத்தும் இந்தக் காங்கிரசார்கள், உதகமண்டல உல்லாசவாசம் தேடுகின்றனர்; ஏழையைக் கேலி செய்கின்றனர். தங்களை ஆட்சியில் அமர்த்திய குற்றத்திற்காக அவர்களுக்கு இந்தத் தண்டனைபோலும்!

இந்த அநியாயத்தை, காங்கிரஸ் ஆளவந்தார்கள் மனம் துணிந்து செய்கின்றனர்!

மக்கள்தான் அவர்களுக்குப் பாடம் புகட்டவேண்டும்.

நாம், இந்தக் காங்கிரஸ் ஆளவந்தாரின் உல்லாசம் தேடும் போக்கை வன்மையாகக் கண்டிக்கிறோம். எல்லாரும் கேட்காமல் இந்த அநியாயத் திட்டத்தையும் கண்டிக்கிறோம். ஊட்டிச் செல்லத் திட்டமிட்டிருந்தால் அதனை உடனே கைவிட வேண்டுமெனக் கோருகிறோம்.

# பல இலட்சம் ரூபாய் செலவில் வாங்கப்பட்ட எஞ்சின்கள்

## பயனற்றவைகள் என மக்கள்சபையில் புகார்

### டில்லிப் பெரியவர்களின் 'ஆளும் திறனு'க்கு மற்றுமோர் எடுத்துக்காட்டு

புதுடில்லி, மார்ச் 29—

டில்லிப் பெரியவர்களுக்கு நிர்வாகத் திறமைக் குறைவு என்பது மட்டுமின்றி, ஏமாளித்தனமும் அதிகம் என்பதை, அவர்களது ஆட்சி நிர்வாகம் தெளிவாக்கிக்கொண்டிருக்கிறது.

### வாங்கினர்—உபயோகமில்லை!

"புதிதாக இரயில் எஞ்சின்கள் — (ஒய். பி.) — வாங்கினர் டில்லி சர்க்கார்; இறக்குமதி செய்த அவை, சில கோளாறுகளுடையனவாக இருக்கின்றன என்றும், அவை, தேவைகளைக் கேட்டிருந்தபடி தயாரிக்கப்பட்டவை அல்ல என்றும், அதனால் அந்த எஞ்சின்களுக்கு கொடுத்த தொகையை நஷ்டக்கணக்கில் எழுத வேண்டியதுதான் என்றும் ஆடிட்டர்-ஜெனரல் தனது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்,"

என்று, மக்கள்சபையில் பெரோஸ் காந்தி கூறியிருக்கிறார்.

### மந்திரிக்குத் தெரியாதாம்

'மந்திரிக்கு இது குறித்துத் தெரியுமா?' என்று கேட்டபோது அவர், 'தெரியாது' என்று பதிலளித்தாராம்!

பதிலளித்த இரயில்வே மந்திரி செகஜீவன்ராம், இந்த எஞ்சின்கள் உபயோகப்படுமா படாதா என்பதைக்கூடக் கூற முடியவில்லையாம்!

## வேதனையை நோக்கிச் செல்லும் சோதனைகள் எதற்கு?

### பிறவாத பின்சந்ததிகளும் பின்னடைய வேண்டுமா?

"ர்வளிக்குண்டு வெடிக்கு இலக்கானவர்களின் குரலுக்குச் செவிசாய்த்தே தீரவேண்டும்; அக்குரலைக் கேட்கும்படி அரசியல்வாதிகளைக் கட்டாயப்படுத்த வேண்டும்"

என்று, பிரிட்டனின் ர்வளிக்குண்டு சோதனைகளைப் பற்றி, பிரிட்டிஷ் தொழிற்கட்சிப் பத்திரிகையின் உத்தியோக பூர்வமான இதழான 'டெய்லி ஹெரால்ட்' இதழின் தலையங்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

"மருத்துவத் துறையின்சான்று களும் மக்கள் உணரத் தொடங்கியதிலிருந்து ர்வளிக் குண்டின் சோதனைகள் உலக மக்களின் கருத்து வெறுக்கிறது. பிறவாத பின்சந்ததிகளைக்கூடப் பின்னப் படுத்தும் அபாயம்மட்டும் இதில் இருக்கவில்லை என்பதை மருத்துவக் குறிப்புகள் காட்டுகின்றன. உலகத்தில் விஷத்தைப் பரப்புவதால் இரத்தத்திலும், எலும்புகளிலும் புற்றுநோயை உண்டாக்குவது சாத்தியம் என்று இப்போது தெரிகிறது.

"குழந்தைகளுக்கு எலும்பு உருவாகும் பருவத்தில்தான் மிதமிஞ்சிய ரேடியக் கதிரியக்கத்திலிருந்து உண்டாகும் அபாயம் பெரிதாக இருக்கும். வேதனையை நோக்கிச் செல்லும் இப்போட்டியை நிறுத்த வேண்டுமெனில் அதற்கு இதுதான் சமயமாகும்."

## வட்டார மொழிகளையே பயன்படுத்த இசைவு

புதுடில்லி, மார்ச் 28—

"கூடுமானவரையில் எல்லாப் பாக்கிகளும் அன்றாட அலுவல்களில் வரவு-செலவு கணக்குப் பதியும்போதும், மற்றும் விண்ணப்பத்தாள்கள், ரசீதுகள் போன்றவைகளை அச்சடிக்கும் போதும் வட்டார மொழியையே பயன்படுத்துவதற்கு இசைந்துள்ளன" என்று மத்திய ரெவினியூ அமைச்சர் மக்கள் சபையில் தெரிவித்துள்ளார்.

# தேர்தல் தோல்விகள்

## 'தவிர்க்க முடியாதவன்' என்று எண்ணுவோருக்குத் தரப்படும் அறைகூவல்

### பண்டிதர் கருத்து

புதுடில்லி, மார்ச் 29—

"தேர்தலில் ஈடுபட்ட நமது முக்கியமான சகாக்கள் தோற்றுவிட்டிருக்கிறார்கள். காங்கிரசிற்கு தோல்வி என்று கூறுவதைவிட, இந்த நிலையை, தான் காங்கிரசிற்குத் தவிர்க்க முடியாதவன் என்று எண்ணிக் கொண்டிருப்பவர்களுக்குத் தரப்படும் அறைகூவல் என்றே சொல்லலாம்; ஏனெனில், அந்தப் பிரதேசங்களில், வேறு காங்கிரசார் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர்.

"சிலர் காங்கிரசிற்குத் தவிர்க்க முடியாதவர்கள் என்று எண்ணுவதை மக்கள் விரும்பவில்லை என்பதையே அந்தத் தோல்விகள் காட்டுகின்றன.

"இது, ஆரோக்கியமான சனநாயக வளர்ச்சிக்கு நல்ல அறிகுறியாகும்.

"இந்தியாவில், நாம் தனிப்பட்டவர்களைத் துதிக்கும் பழக்கத்தைக்கொண்டிருக்கிறோம்.

"இது, ஒருவர் ஒரே இடத்தில் (பதவியில்) நெடுநாள் நீடிப்பதால் இன்னும் வளருகிறது; எனவே, மாற்றங்கள் இருக்க வேண்டும். இல்லாவிடில், ஒருவர், தேக்க நிலைக்கு ஆளாகிவிடக்கூடும்.

"எனவே, என்னையே மீண்டும் நீங்கள் தலைவராகத் தேர்ந்தெடுத்தமைக்கு நான் நன்றி தெரிவிக்கும் அதே நேரத்தில், நான் இது குறித்து சந்தோஷப்படவில்லை என்பதையும் சொல்ல விழைகிறேன்"

என்பதாக பண்டித நேரு அவர்கள், தன்னையே மீண்டும் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுத்த உறுப்பினர்களிடை பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

# சமரசப் பேச்சுகள் முறிந்துவிட்டன!

## வேலை நிறுத்தம் நீடிக்கிறது; 15-இலட்சம் பேர் ஈடுபடுவர்

இலண்டன், மார்ச் 29—

ஊதியத் தகராறு சம்பந்தமாக பிரிட்டனில் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள பொறியியல் தொழிலாளருக்கும் — முதலாளிகளுக்கும் இடையே நடைபெற்ற பேச்சுவார்த்தைகள் முறிந்து போயின.

அடுத்த 24 மணி நேரத்தில் மேலும் 5 இலட்சம் பேர் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவார்கள். எற்கனவே 10 இலட்சம் பேர் வேலை நிறுத்தம் செய்துள்ளனர்.

## சென்னை சட்டசபைக்கு தற்காலிகத் தலைவர்?

சென்னை, மார்ச் 29—

இப்போதைய சட்டசபையின் உதவித் தலைவராக உள்ள பி. பக்தவத்சலு அவர்கள், புதிய சட்டசபையின் தற்காலிகத் தலைவராக நியமிக்கப்படுவார்.

புதிய சட்டசபை கூடி தலைவரைத் தேர்ந்தெடுக்கும் வரையில் இவருடைய பொறுப்பில் சட்டசபை நடைபெறும்.

# தமிழ் மாநிலத்தில் அமையும் தொழில்கள்

வாலாசாபாத், மார்ச் 30—

நாசரத்பேட்டை, பூந்தமல்லி, அதப்பை ஆகிய மூன்று இடங்களில் எண்ணெய், கைக்குத்தல் அரிசி தயாரிப்புக்கான சாதனங்களை எற்படுத்தவும், பூண்டியில் தோல் சாமான்கள் தயாரிப்பாளர் சங்கம் அமைக்கவும், பூந்தமல்லியில் இரும்புகள், திருகாணிகள் தயாரிக்கவும், மேலும் ஒரு சுருட்டுத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கம், தாரிகை (பிரஷ்)கள் செய்வோர் கூட்டுறவுச் சங்கம், குயவர் கூட்டுறவுச் சங்கம் எற்படுத்தவும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

இந்தக் குடிசை—சிறு தொழில்களை செங்கற்பட்டு மாவட்டத்தில் கூட்டுறவு முறையில் தொழில் இலாகா அமுல் செய்யப்படுமாம்.

★

### தென்னை நார்ப் பொருள் பயிற்சி உற்பத்தி நிலையம்

சென்னை, மார்ச் 29—

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள சதுரங்கப்பட்டணத்தில் ஒரு தென்னை நார்ப் பொருள் பயிற்சி உற்பத்தி நிலையம் அமைக்கப்பட்டுள்ளதாம். இதற்கு ரூ. 1,405 மானியமாகவும், நடைமுறைச் செலவிற்கு ரூ. 2,520 கடனாகவும் தரப்படுமாம். தயாரிக்கப்படும் பொருள்களை விற்பனைக்குக் கூட்டுறவுச் சங்கத்திற்குக் கொடுக்கப்படுமாம்.

சென்னை மாநிலத்தில் இதைத் தவிர நான்கு நார்ப் பொருள் பயிற்சி நிலையங்கள் உள்ளனவாம். இதற்கு மத்திய அரசாங்கம் ரூ. 8,000 மானியமாகவும், ரூ. 65,650 கடனாகவும் தருவதற்கு இசைந்துள்ளதாம்.

★

### சோப் தொழிற்சாலைகளாம்!

அரசாங்கம் அனுமதித்துவிட்டதாம்

சென்னை, மார்ச் 28—

உணவுக்குப் பயன்படாத எண்ணெயைக் கொண்டு சோப் செய்யும் தொழில் அபிவிருத்திக்காக மாநிலத்தில் 10 'சி' பிரிவு சோப் செய்யும் தொழிற்சாலைகளை (யூனிட்டுகள்) எற்படுத்த சர்க்கார் அனுமதித்திருக்கிறதாம்.

திட்டத்தை ஆரம்பிப்பதற்கு ஆகும் செலவு ரூ. 1,02,500 என்றும், ஆண்டுதோறும் ரூ. 63,900 ஆகுமென்றும் தெரியவருகிறது.

8 நிலையங்கள் திருக்கழுக்குன்றம், மேலூர், கரூர், ஆத்தூர் (சேலம்), காங்கேயம், பண்ருட்டி, திருமங்கலம், முனிச்சோரை அல்லது அகதீசுவரம் ஆகிய இடங்களில் எற்படுத்தப்படுமாம். மற்றுமுள்ள 2 நிலையங்களில் ஒன்று இராமநாதபுரத்தில் ஒரு 'பிளாக்'கிலும், மற்றொன்று ஆரம்பிப்பதற்கான, இடம் பின்னர் கைத்தொழில் வர்த்தக டைரக்டரினால் முடிவு செய்யப்படுமென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# இரயில்வே நிலைய அதிகாரிகள் முடிவு

## வேலை நிறுத்தம் செய்வர்

டேராடூன், மார்ச் 28—

இந்திய இரயில்வேக்களிலுள்ள ஆறு பகுதிப் பிரிவுகளில் ஐந்து பிரிவைச் சேர்ந்த இரயில் நிலைய அதிகாரிகளும், துணை அதிகாரிகளும், மே மாதம் மூன்றாவது வாரத்திலிருந்து வேலை நிறுத்தம் செய்வதென முடிவு செய்துள்ளதாகத் தெரியவருகிறது.

மேலதிகாரிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தும் உரிமையைக் கோரியும், மற்ற பிரிவுகளிலிருந்து ஆட்களை எடுப்பது நிறுத்த, வேலை உயர்வு வசதிகளை அதிகரிக்க, வேலைக்கு ஆட்களை எடுக்கும்போது உள்ள கண் பரிசோதனை விதிகளைக் குறைப்பது முதலியன அவர்களுடைய கோரிக்கைகளாகும்.





# தமிழகத்தின் பட்டிதொட்டியெங்கும் பாராட்டு விழாக்கள்

## அண்ணா, மற்றும் கழகத் தோழர்கள் வெற்றிக்காக இனிப்புகள் வழங்கிக் கொண்டாட்டம்

★

**சென்னை—புதுப்பாக்கம்:**

22—3—57 பிற்பகல் 12 மணியளவில், அண்ணா அவர்களையும், மற்றும் வெற்றி பெற்ற கழகத் தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், ஏ. வி. பி. ஆசைத்தம்பி, மு. கருணாநிதி ஆகியோரைப் பாராட்டியும், சென்னை—புதுப்பாக்கம் அண்ணா படிப்பகம் சார்பில் ஏழைகளுக்கு உணவு அளிக்கப்பட்டது.

**சென்னை—சிந்தாதிரிப்பேட்டை:**

24—3—57 காலை 9 மணிக்கு சென்னை — சிந்தாதிரிப்பேட்டை (30-வது வட்ட) தி. மு. கழகச் சார்பில், எழும்பூர் தொகுதியில் வெற்றி பெற்ற தோழர் க. அன்பழகன் அவர்களைக் கொண்டு ஊர்வலம் ஒன்று நடத்தப்பட்டது. வட்டத்தில் எல்லா தெருக்களிலும் தோரணங்கள்கட்டி அலங்கரிக்கப்பட்டிருந்தது. காப்பி—பால்—மோர் முதலியவை ஒவ்வொரு தெருவிலும் வழங்கப்பட்டது.

தோழர் க. அன்பழகன் அவர்கள் ஏராளமான மலர்மாலைகளும் கைத்தறித்துணிகளும் அணிவிக்கப்பட்டு பாராட்டப்பட்டார். தோழர்கள் மணிவண்ணன், அ. பொ. அரசு ஆகியோருக்கும் மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

**மதுரை—திண்டுக்கல் ரோடு:**

24—3—57 காலை மதுரை—திண்டுக்கல் ரோடு வி. எஸ். மணி இல்லத்தின் முன்பு, வெற்றி பெற்ற கழகத் தோழர்கள் அனைவரையும் பாராட்டி பொதுமக்கள் சார்பில் ஏராளமான ஏழைமக்களுக்கு கஞ்சி வார்க்கப்பட்டது. அன்று மாலை 6-30 மணிக்கு தோழர் பாலகிருஷ்ணன் தலைமையில் பாராட்டுக் கூட்டமொன்று நடைபெற்றது. தோழர்கள் கே. எஸ். சந்தானம், எஸ். முத்து மற்றும் பலர் பேசினர்.

**கூடமலை:**

தேர்தலில் வெற்றி பெற்ற கழகத் தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், எம். பி. சுப்பிரமணியம், டி. இருசப்பன் ஆகியோரைப் பாராட்டி கூடமலை தி. மு. க. ஆதரவாளர்களால் 2,000 பாக்கெட் மிட்டாய்கள் வீடு தவறுமல் வழங்கப்பட்டது.

**திண்டுக்கல்:**

23—3—57 இரவு 9 மணிக்கு திண்டுக்கல் கே. வி. கே. சாமி நினைவு படிப்பகத்தில் தோழர் செல்லையா தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தேர்தலில் வெற்றி பெற்ற தி. மு. கழகத் தோழர்களைப் பாராட்டி, சிறுவர்—சிறுமிகளுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

**சேதுவாய்த்தான் (நெல்லை)**

23-3-57 இரவு 9-30 மணிக்கு இவ்வூர் தி. மு. க. சார்பில் தோழர் ந. தங்கபாண்டியன் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் மு. ச. மணிமொழியன், சுந்தரராசன் ஆகியோர் பொதுத்தேர்தலில் தி. மு. கழகம் பெற்ற வெற்றியைப் பாராட்டிப் பேசினர்.

**பெங்களூர்—கும்பா பேட்டை**

அண்ணா அவர்களும், பிற கழகத் தோழர்களும் வெற்றி பெற்றதற்கு பாராட்டியும், மகிழ்ச்சி தெரிவித்தும் கும்பார்பேட்டை கூலித் தொழிலாளர்கள் மிட்டாய்—பூந்தி முதலியவை வழங்கி வெற்றிவிழா கொண்டாடினார்கள்.

**இலங்கை:**

10—3—57-ல், கொழும்பு நகர தி. மு. கழகச் சார்பில், காஞ்சித் தொகுதியில் அண்ணா அவர்களைப் பாராட்டி வெற்றி விழா கூட்டம் ஒன்று 'உம்பிச்சி பிளேஸ்' முக்தாரின் இல்லத்தில் நடைபெற்றது. தோழர் மணவைத்தம்பி தலைமை வகித்தார். தோழர்கள் எம். முக்தார், செல்வத்தம்பி பேசிய பின், மக்களுக்கு இனிப்புகள் வழங்கினர்.

**வேப்பலோடை:**

8—3—57 இரவு 8 மணிக்கு, வேப்பலோடை தி. மு. க. சார்பில், அண்ணா அவர்கள் வெற்றியைப் பாராட்டி, தோழர் வி. பி. பி. முத்து தலைமையில் ஓர் ஊர்வலம் நடைபெற்றது. பொது மக்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டதுடன், தோழர்கள் ஒ. மூக்கையா, ஆர். இராமலிங்கம் ஆகியோரின் இன்னிசையும் நடைபெற்றது.

**தோளசம்பட்டி:**

பொதுத் தேர்தலில் வெற்றி பெற்ற கழகத் தோழர்கள் அனைவரையும் பாராட்டி 18—3—57 அன்று தோளசம்பட்டி தி. மு. க. சார்பில் ஓர் ஊர்வலம் நடைபெற்றது. அன்று மாலை 7 - மணிக்கு தோழர் இரா. திருமலை அவர்கள் தலைமையில் நடைபெற்ற வெற்றி விழாக் கூட்டத்தில் தோழர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். குழந்தைகளுக்கு இனிப்பும், பெரியோர்களுக்கு தேசீர், காபி, வெற்றிலை-பாக்கு முதலியவையும் வழங்கப்பட்டது.

**கோம்புப்பாளையம்:**

18—3—57 அன்று கோம்புப்பாளையம் தி. மு. க. சார்பில் தேர்தலில் வெற்றி பெற்ற தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்களைப் பாராட்டுமுகத்தான் ஓர் ஊர்வலம் நடைபெற்றதோடு, பொதுமக்களுக்கு மிட்டாய்களும் வழங்கப்பட்டன.

**தச்சன் நல்லூர்:**

18—3—57ல் இவ்வூர் தி. மு. க. சார்பில் பொதுத் தேர்தலில் வெற்றிபெற்ற அண்ணா அவர்களையும், மற்ற கழகத் தோழர்களையும் பாராட்டி, தோழர் மு. சண்முகம் அவர்கள் இல்லில், தோழர் கே. ஆர். பி. மணிமொழியன் அவர்கள் கொடியேற்றி சொற்பொழிவாற்றினர். சிறுவர்களுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

**ஆல்வாய் (கேரள பகுதி)**

அண்ணா அவர்களும், மற்றும் கழகத் தோழர்களும் பொதுத் தேர்தலில் வெற்றி பெற்றதைப் பாராட்டியும்—வாழ்த்தியும் 'கண்ணன் டைரி' என்ற பகுதியில் தமிழர்—மலையாள நண்பர்கள் அனைவருக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்டது. முதலாவதாகத் தேர்தலில் ஈடுபட்ட நமக்கு 15 இடங்கள் கிடைத்ததையும், 16 இலட்சம் வாக்குகள் பெற்றதையும் மலையாள நண்பர்கள் பாராட்டினர்.

**நல்லூர்:**

17—3—57 இரவு தேர்தலில் வெற்றி பெற்ற தோழர் மு. கருணாநிதி அவர்களைப் பாராட்டி நல்லூர், தரிசு தி. மு. கழகக் கிளைகளின் சார்பிலும், தி. மு. கழக ஆதரவாளர்களாலும் கழகப் பணிமனையிலிருந்து ஓர் வெற்றி ஊர்வலம் நடைபெற்றது. பொதுமக்களுக்கு இனிப்பும் வழங்கப்பட்டது.

**ஆனகாபுத்தூர்:**

25—3—57-ல், அண்ணா அவர்கள் வெற்றி பெற்றதைப் பாராட்டி ஆனகாபுத்தூர் தி. மு. கழகச் சார்பில் ஓர் ஊர்வலம் நடைபெற்றது. சிறுவர்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டன.

**மேட்டூர் — கண்ணாமூச்சி:**

அண்ணா அவர்கள் வெற்றி பெற்றதைப் பாராட்டி மேட்டூர் - கண்ணாமூச்சி தி. மு. க. சார்பில் ஓர் ஊர்வலம் செட்டியூர் வரை நடைபெற்றது. செட்டியூரில் தோழர் அ. குருசாமி தலைமையில் நடைபெற்றப் பாராட்டு விழாப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் கோவிந்தசாமி, கோபால், மாணிக்கம் ஆகியோர் பேசினர்.

**பட்டீச்சுரம்:**

8-3-57மாலை அண்ணா அவர்கள் வெற்றிக்கு மகிழ்ச்சியும்—பாராட்டும் தெரிவிக்குமுகத்தான் பட்டீச்சுரம் தி. மு. கழகச் சார்பில் வெற்றி விழாவும், இனிப்புகளும் வழங்கப்பட்டது.

**புதூர்பாளையம்:**

24-3-57 அன்று திருச்சி மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தனக்கு வாக்களித்த மக்களுக்கு நன்றி கூறுமுகத்தான் புள்ளம்பாடி பகுதிகளில் உள்ள கிராமங்களுக்குச் சென்று மக்களுக்கு நன்றி கூறினர். புதூர் பாளையத்தில் சிறப்பான ஊர்வலமொன்றும் நடைபெற்றது.

**புளியால்:**

24-3-57 மாலை 6 மணிக்கு, தோழர் கருப்பையா தலைமையில் நடைபெற்ற புளியால் தி. மு. கழக உறுப்பினர்கள்—ஆதரவாளர்கள் கூட்டத்தில் பொதுத் தேர்தலில் வெற்றிபெற்ற கழக அபேட்சகர்கள் அனைவருக்கும் பாராட்டும் மகிழ்ச்சியும் தெரிவிக்கப்பட்டது.

**விருதுநகர்:**

24-3-57 காலை 8 மணிக்கு விருதுநகர் இராமமூர்த்தி ரோடு, தி.மு.க.தோழர்கள் வெற்றியுற்ற தி. மு. கழக அபேட்சகர்களைப் பாராட்டி, மேற்படி ரோடிலுள்ள தோழர் எஸ். எஸ். தானியல் கடைமுன்பு ஏராளமான ஏழைகளுக்கு உணவு வழங்கினார்கள்.

**ஆமதாபாத்—ஜமால்பூர்:**

அண்ணா அவர்களின் வெற்றியை 7-3-57 இரவு 11 மணிக்கு 'அறிவகத்'திலிருந்து ட்ரங்க் டெலிபோன் மூலம் அறிந்த ஆமதாபாத்-ஜமால்பூரில் வதியும் கழகத் தோழர்கள், உடனே ஆமதாபாத்தில் தமிழர்கள் வாழும் எல்லாப் பகுதிகளிலும் சைக்கிள்களில் சென்று வெற்றிச் செய்தியைப் பரப்பினர்கள். 8-3-57 தேதி தங்கள் மகிழ்ச்சியையும்—பாராட்டையும் தெரிவிக்கும் பொருட்டு, இங்குள்ள கிளைக் கழகங்களும் தோழர்களும் இனிப்புகள் வழங்கியும், வெடிகள் முழக்கியுமிருக்கின்றனர்.

அம்பிகா ஆலை நெம்பர் 2-ல் வேலை செய்யும் தோழர்கள் ஆலையின் முன்புறமும், பின்புறமும் அதிர் வெடிகள் பல முழக்கியிருக்கிறார்கள்.

மற்றும் கழக வீரர்களை தேர்ந்தெடுத்தனுப்பிய தாயக மக்களை வாழ்த்தியும் — பாராட்டியும் செய்தியனுப்பியுள்ளனர்.

* * *

24-3-58 மாலை 6 மணிக்கு தோழர் டி. பி. பாலகிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற சமால்பூர் தி. மு. கழக உறுப்பினர் கூட்டத்தில், அண்ணா அவர்களையும் மற்றும் வெற்றி பெற்றக் கழகத் தோழர்கள் அனைவரையும் பாராட்டித் தோழர்கள் இரா. தணிகாசலம், எம். பி. இராமச்சந்திரன், இரா. வைத்தியலிங்கம் ஆகியோர் பேசினர். தோழர் பி. எஸ். வெங்கடதாசன் அவர்களால் வந்திருந்த அனைவருக்கும் இனிப்புகள் வழங்கப்பட்டது.

**உடுமலைப்பேட்டை:**

அண்ணா அவர்களின் வெற்றி செய்தியறிந்து, உடுமலை வெங்கடேசா ஆலையில் பணியாற்றும் திராவிட பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தார் ஆலைத் தொழிலாளர்கள் அனைவருக்கும் இனிப்புகள் வழங்கினர்.

# முறிந்துபோன நிறுவனங்களில் இன்ஷ்யூர் செய்தவர்கள்

## சர்க்காரிடமிருந்து பணம் பெறுவர்

புதுடில்லி, மார்ச் 28—

முறிந்துபோன 29 இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்களின் பொறுப்புகள் முழுவதையும் இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, அதன் பாலிசிதாரர்களுக்கு முழுத் தொகையையும் தந்துவிடுவதென முடிவு செய்துவிட்டதாம்!

இந்த முடிவினால் சுமார் 1 - இலட்சம் பாலிசிதாரர்கள் பயனடைவார்களாம்!

இந்தத் தகவலை மக்கள் சபையில் நிதி அமைச்சர், இந்த நிறுவனங்களிலுள்ள சொத்துக்களுக்கு மேல் மொத்தத்தில் ரூ. 70 - இலட்சம் கடன் இருக்கக்கூடும் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

# சாதுக்களின் நெறியற்ற செயல்

## பெண்களையும் சிறுவர்களையும் கடத்திச் செல்வதேன்?

இந்தூர், மார்ச் 30—

"சாதுக்கள் சிறுவர்களைக் கடத்திச் சென்று அவர்களைச் சாதுக்களாக மாற்றுகிறார்கள் என்றும், வயது வந்த பெண்களையும் கடத்திச்சென்றுவிடுகிறார்கள் என்றும், அத்தகைய செயல்களைத் தடுப்பதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் மத்திய அரசாங்கத்தை சுவாமி பரமநாத் என்பவர் கேட்டுக்கொண்டார்.

அலகாபாத்திலும், நாசிக்கிலும் நடைபெற்ற மேளா விழாக்களின்போது 3,400 சிறுவர்களைக் கடத்திச் சென்று, அவர்களைச் சாதுக்களாக மாற்றினர்கள் என்றும் அவர் தெரிவித்தார்.

# ஆலைத் தொழிலாளருக்கு குடியிருப்பு வசதி

## டில்லிப் பேரரசின் தாராளம்

புதுடில்லி, மார்ச் 31—

மதுரையிலுள்ள மீனாட்சி ஆலைத் தொழிலாளர்களுக்கு குடியிருப்பு வசதி ஏற்படுத்த அந்த ஆலைக்கு இந்திய அரசாங்கம் ரூ. 104,375 மானியம் வழங்கியிருக்கிறதாம்.

தொழிற்சாலைக்கு அருகே 50 இரண்டு அறைவிடுதிகள் கட்ட இந்த மானியம் தரப்பட்டுள்ளதென்றும், இந்த ஆண்டு டிசம்பர் இறுதிக்குள் விடுதிகள் கட்டி முடிக்கப்படுமென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# கேரளத்தில் மருத்துவக் கல்லூரி ஏற்படுமாம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் கேரள மாநிலத்திலுள்ள கோழிக்கோட்டில் ஒரு மருத்துவக் கல்லூரியை எற்படுத்துவதற்கு உதவியளிக்க மத்திய அரசாங்கம் முன்வந்திருக்கிறது.

இந்தத் திட்டத்திற்கான துவக்கச் செலவில் 75 சதவிகிதத்தையும் ஆண்டுதோறும் ஆகும் செலவில் 50 சதவிகிதத்தையும் மத்திய அரசாங்கம் அளிக்கும்.

வரும் ஜூன் முதல் இக்கல்லூரி நடைபெறுவதற்கான வேலைகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன.

# தாம்பரம் - விழுப்புரம் இடையே மின்சார ரயில்

## ரூ. 3,68,00,000 செலவாகுமாம்

புதுடில்லி, மார்ச் 28—

தென்பகுதி இரயில்வேயில் தாம்பரத்திற்கும்—விழுப்புரத்திற்கும் இடையே மின்சார இரயில் போக்குவரத்து எற்படுத்துவது சம்பந்தமான வேலை 1958-59-ல் ஆரம்பிக்கப்படுமென்றும், தேவையான சாமான்கள் கிடைக்கப்பெற்றால் 1959-60-ம் ஆண்டிலேயே இந்த மின்சார இரயில் பாதை போடும் வேலை பூர்த்தியாகிவிடும் என்றும் இதற்கு ரூ. 3,68,00,000 செலவாகுமென்று மதிப்பிடப்பட்டுள்ளதாகவும் மக்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

### ரூ. 346 கோடி மானியமாம்!

விவாதம் நடைபெறாமலேயே மக்கள் சபையில், 1957-58 நிதி ஆண்டிற்கு ரூ. 346,72,00,000-த்திற்கான இரயில்வே மானிய மசோதா நிறைவேற்றப்பட்டிருக்கிறது

# சிற்றுண்டிச்சாலைகளில் சுகாதாரம் நிலவும்

## ஏற்ற பணி புரியத் திட்டம்

இராசகோட்டை, மார்ச் 26—

எப்ரல் முதல் தேதியிலிருந்து ஒரு வாரம் வரையில் 'சுகாதார வாரம்,' கொண்டாடுவதென இராஜ்கோட் ஊராட்சி மன்றம் முடிவு செய்திருக்கிறது.

சுகாதார இலாகாவின் பிரிவுகள் யாவும் ஊரிலுள்ள சிற்றுண்டிச்சாலைகளில் முழு அளவில் சுகாதாரம் நிலவுவதற்குப் பாடுபடுமாம்.

மருத்துவ இலாகாப் பிரிவு ஊழியர்களும் சிற்றுண்டிசாலைகளுக்கு நேரில் சென்று தொண்டாற்றுவார்களாம்.

நல்லமுறையில் நடத்தப்படும் சிற்றுண்டிச்சாலைகளுக்கு பரிசுகள் வழங்கவும் திட்டமிடப்பட்டிருக்கிறது.

இந்த முயற்சிக்கு முழு ஆதரவு தர இராஜ்கோட் சிற்றுண்டிச் சாலைகளின் அதிபர்கள் இசைந்துள்ளனராம்.

# ஆந்திரம் - சென்னை சொத்துப் பிரிவினை

## குடியரசுத் தலைவரிடம் ஆந்திரம் நியாயம் கோருமாம்;

ஐதராபாத், மார்ச் 29—

"புதிய மாநில அமைப்புக்கு முன்னர் சென்னை மாநிலத்தின் சொத்து—கடன் முதலியவை சம்பந்தமாக சென்னை—ஆந்திரத்திற்கிடையே திருப்திகரமான உடன்பாடு ஏற்படாவிட்டால் குடியரசுத் தலைவரிடம் நியாயம் கோரப்படும்" என்று, ஆந்திர நிதி அமைச்சர் கூறியுள்ளார்.

# புதிய பாராளுமன்றம்

## மே 13-ந் தேதியன்று ஆரம்பம்?

புதுடில்லி, மார்ச் 28—

இந்தியக் குடியரசின் முதல் பாராளுமன்றம் (மக்கள் சபை) எப்ரல் 4-ந் தேதியன்று தலைவரின் உத்தரவின்படி கலைக்கப்படுமாம்.

புதிய பார்லிமெண்டின் முதல் கூட்டம் மே மாதம் 13-ந் தேதியன்று நடைபெறக் கூடுமெனத் தெரியவருகிறது.

# அண்ணா சட்டசபைக் கழகத் தலைவர்

## துணைத் தலைவராக க. அன்பழகன்

## 'கொறடா'வாகிறார் மு. கருணாநிதி

## ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம் செயலாளராகப் பணி புரிவர்

சென்னை, ஏப். 1—

சென்னை சட்ட மன்ற திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்களடங்கிய முதல் கூட்டம் 31-3-57 ஞாயிறு காலை 10-மணியளவில், சென்னை இராயபுரம் 'அறிவக'த்தில் நடைபெற்றது.

பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் தலைமையில் நடைபெற்ற அந்தக் கூட்டத்தில் **அண்ணா** அவர்கள், சட்டசபை தி. மு. கழகத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

துணைத் தலைவராக தோழர் க. **அன்பழகன்** அவர்களும், கொறடாவாக தோழர் மு. **கருணாநிதி** அவர்களும், செயலாளர்களாக தோழர்கள் **ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம்** ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சுமார் மூன்று மணி நேரம் நடைபெற்ற அந்தக் கூட்டத்தின் முடிவுகளை அறிந்துகொள்வதற்காக ஏராளமான தோழர்கள் காலைமுதல் மாலைவரை 'அறிவகத்'தில் கூடியிருந்தனர்.

மத்திய செயற்குழு உறுப்பினர்களான கே. கே. நீலமேகம், ஜி. பி. சோமசுந்தரம், கே. ஏ. மதியழகன், சி. பி. சிற்றரசு, மதுரை-எஸ். முத்து, அன்பில்-தருமலிங்கம் ஆகியோரும், விசேட அழைப்பின்பேரில் சட்ட மன்ற உறுப்பினர் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

இறுதியில், துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன் நன்றி நவில கூட்டம் இனிது முடிவுற்றது.

கூட்டத்தில், வெற்றி பெற்ற தி. மு. கழக சட்ட மன்ற-பாராளு மன்ற உறுப்பினர்கள் அனைவரும் (தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்களைத் தவிர) கலந்துகொண்டனர்.

சட்ட மன்ற உறுப்பினர்களான அண்ணா, அண்ணாமலை, அன்பழகன் ஆசைத்தம்பி, ஆனந்தன், இருசப்பன், கருணாநிதி, சத்தியவாணிமுத்து, ப. உ. சண்முகம், சந்தானம், மா. பா. சாரதி, எம். செல்வராஜ், சி. நடராசன் ஆகியோரும், மக்கள் சபை உறுப்பினர்களான, ஈ. வெ. கி. சம்பத், இரா. தர்மலிங்கம் ஆகியோரும் கலந்துகொண்டனர்.

## அனுபவத்திற்குப் பிறகு இந்தப் புத்திமதி?

புதுடில்லி, மார்ச் 30—

"ஆடம்பரத்தை அமைச்சர்கள் விட்டொழிக்கவேண்டும். பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்ய வேண்டியது அவசியந்தான்; ஆனால், அதை எளிய முறையில் செய்யலாம்; அமைச்சர்களின் பின்னால் ஒரு லாரி நிறைய போலீசாரை அனுப்பும்படி மாவட்டப் போலீஸ் அதிகாரிகளைக் கேட்டுக்கொள்ளுவதற்கு அவசியமே கிடையாது; அதிகாரத் தடபுடல்களை மொத்தத்தில் அமைச்சர்கள் கைவிட்டுவிட வேண்டும்,"

என்று, பத்தாண்டுகள் அனுபவத்திற்குப் பிறகு பண்டித நேரு காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டாராம்.

## அஞ்சல் இலாகாவில் புதிய நாணய முறை!

பதுடில்லி, மார்ச் 30—

ஏப்ரல் முதல் தேதியிலிருந்து தசாம்ச நாணய முறையில் அஞ்சல், தொலைவரிக் கட்டணங்கள் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது:—

தபால் தலைகள்

| | | | | |
|---|---|---|---|---|
| காலணா | தலை | 2 | புதிய பைசா | |
| அரையணா | ,, | 3 | ,, | |
| முக்காலணா | ,, | 5 | ,, | |
| 1 அணா | ,, | 6 | ,, | |
| 1½ அணா | ,, | 10 | ,, | |
| 2 அணா | ,, | 13 | ,, | |
| 2½ அணா | ,, | 16 | ,, | |
| 3 அணா | ,, | 20 | ,, | |
| 3½ அணா | ,, | 23 | ,, | |
| 4 அணா | ,, | 25 | ,, | |
| 6 அணா | ,, | 37 | ,, | |
| 8 அணா | ,, | 50 | ,, | |
| 10 அணா | ,, | 63 | ,, | |
| 12 அணா | ,, | 75 | ,, | |
| 14 அணா | ,, | 88 | ,, | |
| ரூ.1 அணா 2 | ,, | ரூ. 1 | ,, | 13 |
| ரூ.1 அணா 8 | ,, | ரூ. 1 | ,, | 50 |
| உள்நாட்டு உறை | | 13 | ,, | |
| கார்டு | | 5 | ,, | |
| ரிப்ளை கார்டு | | 10 | ,, | |
| அரையணா கார்டு | | 3 | ,, | |
| 1 அணா ரிப்ளை கார்டு | | 6 | ,, | |
| இரண்டணா உறை | | 13 | ,, | |
| 4 அணா விமானத்தபால் | | 25 | ,, | |
| 12 | ,, | 75 | ,, | |
| 14 | ,, | 88 | ,, | |
| 9½ அணா பதிவு உறைக்கு | | 73 | ,, | |

மணியார்டர்

ரூ. 10-க்கும் அதற்குக் குறைந்தும் 15 ,,

## கோட்டைக்குள் 'குடிபுகும்' திட்டத்தைக் கைவிடுக!

### தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் கோரிக்கை

#### அரசாங்கத்தின் போக்கிற்குக் கண்டனம்

"பொதுமக்களும், பத்திரிகையாளர்களும் நல்ல அக்கரை காட்டி நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கும், தொடர்பு கொள்ளுவதற்கும், சட்டசபை உறுப்பினர்கள் எளிதாகச் சென்று வருவதற்கும் ஏற்றவகையில், சென்னை-மவுண்ட்ரோட்டில் சுமார் பத்து இலட்சம் ரூபாய்க்கு மேல் செலவழித்துப் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் சட்டசபைக் கட்டிடத்தைக் காரணம் காட்டாமல் புறக்கணித்துவிட்டு, இத்தகைய வசதிகளற்றதும், பொதுமக்கள் பெருமளவுக்குத் தொடர்பு கொண்டு நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கு ஏற்றதல்லாததுமான கோட்டையிலுள்ள கட்டிடத்தில் வீண் ஆடம்பரச் செலவு செய்து இனி சட்டசபையைக் கூட்டுவதற்கான ஏற்பாடுகளைப் பொதுமக்களின் கருத்துக்கு மாறாகவும், சட்டசபை உறுப்பினர்களைக் கலக்காமலும் செய்யும் சென்னை அரசியலாரின் ஏற்பாட்டைக் கண்டிப்பதுடன் அந்த ஏற்பாட்டை உடனடியாகக் கைவிட்டு முன்போலவே, மவுண்ட்ரோடு கட்டிடத்தில் தொடர்ந்து சட்டசபைக் கூட்டம் நடைபெற வழிசெய்யவேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழக சட்டசபைக் கட்சி சென்னை அரசியலாரை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது.

என்று, சென்னை சட்ட மன்ற தி. மு. கழக உறுப்பினர்களடங்கிய முதல் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## தலைநகர் தந்த வரவேற்பு

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

கள் அனைவரையும் பாராட்டி, அரியதோர் உரை நிகழ்த்தினர்.

"நான், எம். ஜி. ஆர். நாடக மன்றத்தின் சார்பில் கைத்தறி ஆடைகளை அளிக்கிறேன்—பாராட்டிப் பேசுகிறேன். இராமச்சந்திரன் திராவிட முன்னேற்றக் கழகம் என்ற குடும்பத்தில் ஒரு அங்கத்தினன்; ஆனால் எம். ஜி. ஆர். நாடக மன்றம், முழுக்க முழுக்க கலைஞர்களைக் கொண்டது: அந்த வகைய மக்கள் கலைஞர்களைக் கொண்ட நாங்கள்—மக்களின் இதயத்தில் இடம் பெற இடைவிடாது முயற்சித்துவரும் நாங்கள் இன்று வெற்றி பெற்றுள்ள திராவிட முன்னேற்றக் கழகத்தவரைப் பாராட்டுகிறோம். காரணம், அரசியலும் பொருளாதாரமும், சமூகமும் ஒரு சமுதாயத்தில் ஒன்றோடு ஒன்று பின்னிக்கிடப்பவையாகும்.

"சமூகம் திருந்தவும், பொருளாதாரம் சிறப்படையவும், நல்ல அரசியல் நிறைக்கவும் பாடுபடும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு, கலைஞர்களின்—மக்கள் கலைஞர்களின் ஆதரவு என்றென்றைக்கும் உண்டு என்பதைக் கூறி, கழகத்திற்கு வெற்றி தேடித் தந்த மக்களை—இலட்சோப இலட்சம் மக்களைப் பாராட்டுகிறேன்" என்று குறிப்பிட்டார்.

பாரதி மன்றத்தின் சார்பில் தோழியர் அருணாவும், பிறரும் கைத்தறி ஆடைகள் வழங்கினர். பின்னர், நமது அண்ணா அவர்கள் பேச எழுந்தார்கள்; பல இலட்சம் மக்கள் கொண்ட அந்தக் கூட்டத்தில் ஏற்பட்டிருந்த சிறு அமைதிக் குறைவு நீங்கி, பூரண அமைதி ஏற்பட்டது.

### 'அளவுக்கு மீறிய ஆர்வம் கஷ்டம்தான்'

அண்ணா அவர்கள், 'கடுமையான பலப் பரீட்சைக்குப் பிறகு, பெற்றுள்ள வெற்றி விழாக் கொண்டாடி மகிழவும் மக்களுக்கு நன்றி கூறிக் கொள்ளவுமாக நாம் இங்கே கூடியுள்ளோம்; ஆனால் நமது ஆர்வமும் மகிழ்ச்சியும் அளவு கடந்து சென்று விட்டதால் இங்கு வந்துள்ள நமது வெற்றி பெற்ற தோழர்கள் உங்களிடத்தில் பேசமுடியாத நிலை ஏற்பட்டது. இதிலிருந்து நாம் அறிவது, அளவுக்கு மீறிய ஆர்வம் மொத்தத்தில் கஷ்டம் என்பதுதான். இப்போது பூரண அமைதி நிலவுவதால், வெற்றிபெற்ற நமது தோழர்கள் இங்கு சிறிது நேரம் உங்களிடம் பேசுவார்கள்' என்று குறிப்பிட்டார்கள்.

### வெற்றி பெற்றவர்கள் செலுத்திய நன்றி

அதன்படி, தோழர்கள் எம். பி. சாரதி(வேலூர்), இருசப்பன் (ஆத்தூர்—தனி), சந்தானம் (திருவண்ணாமலை), ப. உ. சண்முகம்(திருவண்ணாமலை) தர்மலிங்கம்(எம்.பி., திருவண்ணாமலை), களம்பூர் அண்ணாமலை(போளூர்), நடராசன், ஆனந்தன்(கள்ளக்குறிச்சி), எம். பி. சுப்பிரமணியம் (ஆத்தூர்), தோழியர் சத்தியவாணிமுத்து, தோழர்கள் ஆசைத்தம்பி, க. அன்பழகன் (சென்னை), மு. கருணாநிதி (குளித்தலை), ஈ. வெ. கி. சம்பத் (எம்.பி., நாமக்கல்) ஆகியோர் தாங்கள் என்றென்றைக்கும் மக்களின் தொண்டர்களாக, கழகத்தின் கொள்கை கோட்பாடுகளுக்காகப் பாடுபடுவோம்—உழைப்போம் என்று உறுதிமொழி நல்கி, நன்றி தெரிவித்துக்கொண்டனர்.

பின், அண்ணா அவர்கள் கருத்துரை வழங்கினார்.

தலைவர் முடிவுரையுடன் கூட்டம் இரவு 10-30 மணியளவில் இனிது முடிவுற்றது.

## இப்போதைய சட்டசபை கலைக்கப்பட்டது

சென்னை, மார்ச் 1—

இன்று பிற்பகலுடன், இப்போதைய சட்டசபை கலைக்கப்படுகிறது என கவர்னர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

### தற்காலிகத் தலைவர்

திரு. பி. பக்தவத்சல (நாயுடு) எம்.எல்.ஏ. அவர்கள் தற்காலிக சபைத் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்றும் உத்திரவு கூறுகிறது.

நாளை அவர், கவர்னர் முன்னிலையில் பதவி ஏற்கிறார்.

## விலை ஏற்றத்திற்கு வழிகாட்டுகிறது புதிய நாணயம்!

சென்னை, ஏப். 1—

இந்தியப் பேரரசு கொண்டு வந்துள்ள புதிய தசாம்ச நாணய (நயா பைசா) முறை இன்று முதல் அமுலாகிவிட்டது; இந்த நாணய மாற்றத்தின் விளைவாக பொதுமக்கள் பாதிக்கப்படுவது கண்கூடாகிவிட்டது.

அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பண்டங்களின் விலையை உயர்த்துவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுவிட்டன.

ஒரு அணா, ஒன்றரையணா, இரண்டணா விலையுள்ள பண்டங்களுக்கு விலையேறுகின்றன.

இதற்கு முக்கிய காரணம் புதிய நாணய முறைப்படி ஒரு அணாவுக்கு 6¼ புதிய பைசா கணக்காகிறது; ஒரு புதிய பைசாவுக்குக் குறைந்த நாணயமாய் இல்லையாதலால் ¼, ½ புதிய பைசாவை முழுசாக்குவதற்காக ஓரணா விலையுள்ள பொருளுக்கு 7; 1½ அணா விலையுள்ள பொருளுக்கு 10; 2 அணா விலையுள்ள பொருளுக்கு 13 என்ற கணக்கில் புதிய நாணயங்கள் தரவேண்டியிருக்கிறது.

## பொது டெலிபோன்கள்

### புதிய நாணய முறைக்கு இப்போது மாறுதாம்!

சென்னை, ஏப். 1—

பொதுமக்கள் உபயோகத்திற்காகப் பொருத்தப்பட்டிருக்கும் சென்னை நகரிலுள்ள பொது டெலிபோன்கள் சம்பந்தப்பட்ட வரையில் தற்போது நடைமுறையிலுள்ள வழக்கமே கையாளப்படுமாம்.

இரண்டு அணா நாணயங்கள் போட்டுப் பொது டெலிபோன்களைப் பயன்படுத்திக் கொள்ளும் இப்போதைய நடைமுறையே இன்னும் சிறிது காலத்திற்குத் தொடர்ந்து நீடிக்குமாம்.

## தீப்பெட்டிகள் விலை

சென்னை, ஏப். 1—

ஏப்ரல் முதல் சாதாரணமாக 40 திக்குச்சிகள் உள்ள தீப்பெட்டி 3 புதிய பைசாவாகவும், 60 குச்சிகள் உள்ள தீப்பெட்டி 5 புதிய பைசாவாகவும் இருக்கும் என்று மத்திய அரசாங்கம் அறிவித்துள்ளது.

## பாராட்டு விழா

2—4—57 காலை 8 மணிக்கு, சென்னை — பெரம்பூர் தனித் தொகுதியில் வெற்றி பெற்ற தோழியர் சத்தியவாணிமுத்து அவர்களைப் பாராட்டி, சென்னை—சூளை பேராசிரியர் சுந்தரனார் நாடகக் கலைக் கழகச் சார்பில், சென்னை சென்னகேசவபெருமாள்கோயில் தெரு, தோழர்கள் கு. வி. நீலம்—எம். எஸ். மணி இல்லத்தருகில், இனிப்பு வழங்குதலும், காலை 11 மணிக்கு, எம். கே. வீரராகவன் முன்னிலையில் மக்களுக்கு உணவு வழங்குதலும் நடைபெறும்.

மாலை 6 மணிக்கு, பழைய ஆட்டுத் தொட்டித் தெருவில் தோழர் மு. கன்னியப்பன் தலைமையில் தோழர்கள் ப. உ. சண்முகம், கண்ணதாசன், போளூர்-சுப்பிரமணியம் மற்றும் பலர் பேசுவர்.

இரவு 9 மணிக்கு, தோழியர் சத்தியவாணிமுத்து தலைமையிலும் தோழர் எஸ். எஸ். தென்னரசு முன்னிலையிலும் தோழர்கள் எஸ். ஏ. ஜி. சாமி—சுப்பராயன் குழுவினரின் இன்னிசையும், தோழர் டி. ஆர். செயராமன் குழு: பேபி-இ. செல்வகுமாரி — பேபி-இரத்தினவள்ளி ஆகியோரின் நடனமும் நடைபெறும்.

## முடி திருத்துவதற்குக் கட்டணம் நிர்ணயம்!

சென்னை, மார்ச் 30—

முடி திருத்துவதற்கு (கிராப்) 65 நயா பைசாவும், முக அலங்கரிப்பதற்கு 20 புதிய பைசாவுமாக நிர்ணயிக்குமாறு முடி திருத்தும் தொழில் நிலையங்களை தமிழ்நாடு மருத்துவர் மத்திய சங்க செயலாளர் ஒரு அறிக்கை மூலம் கேட்டுக்கொண்டுள்ளார்.

## நிர்ணய விலைக்கு சரக்குகளை விற்க மறுப்பு?

பம்பாய், மார்ச் 30—

அரசாங்கம் நிர்ணயித்துள்ள அதிகப் பட்ச விலைக்குப் பருத்தியை விற்பனை செய்ய மறுக்கும் பருத்தி வியாபாரிகளின் சரக்குகளை அரசாங்கம் கைப்பற்றக்கூடுமாம்.

பஞ்சு ஆலைகளுக்கு பருத்தி வினியோகிப்பதில் நெருக்கடி நிலைமை ஏற்பட்டிருக்கிறதாம்; சூதாட்டப் பேரமே இந்த நெருக்கடிக்குக் காரணமென்றும், இத்தகைய நிலைமைகளுக்கு சர்க்கார் இடந் தராது என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.



திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (44, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

